அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஶ்ரீஜக³த்³கு³ருக்³ரந்த²மாலா

# ॥ ब्रह्मानुचिन्तनम् ॥

# ப்³ரஹ்மானுசிந்தனம்

ஶ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஶ்ரீரங்கம்.
1962

உ
॥ श्रीः ॥

# ॥ ब्रह्मानुचिन्तनम् ॥

# ப்³ரஹ்மானுசிந்தனம்

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[ப்ரஹ்மாநுசிந்தனம் என்ற 29 சுலோகங்கள் கொண்ட இச்சிறியபிரகரணத்தில் ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் அடைந்தவன் தன்னை எவ்வாறு எண்ணிக்கொள்வான் என்பதைக்கூறும் முறையில் ஞானியின் அநுபவத்தைக் காட்டுகிறார். அதாவது ஆசார்யாள் தனது ப்ரஹ்மாநுபவத்தை நன்கு வெளியிடுகிறார். தேஹாதிகளைக் காட்டிலும் வேறான ஆத்மாவே ப்ரஹ்மம் என்று கூறி அத்வைதமான அந்த ப்ரஹ்மத்தின் லக்ஷணங்களையும் குறிப்பிட்டு பிரமாணங்களையும் காட்டுகிறார். ஞானம் வரப்பெறாதவர்களும் கடைத்தேற உபாயங்களைக் கூறுகிறார். அந்த ஞானத்திற்கு ஸாதனமான ஸகுணமூர்த்தி த்யானத்துடன் முடிவடைகிறது. குருவின் உபதேசம் பெற்றபின் ப்ரஹ்ம ஸ்வரூபத்தைச் சிந்திக்கவேண்டிய விதத்தைக்காட்டுவதாலும் 26 வது சுலோகத்தில்

**इति ब्रह्मानुचिन्तनम्**

**இதி ப்³ரஹ்மானுசிந்தனம்**

(இதி ப்ரஹ்மாநுசிந்தனம் - என்பது ப்ரஹ்மானுசிந்தனம்) என்று காணப்படுவதாலும் இந்நூலுக்கு ப்ரஹ்மானுசிந்தனம் என்ற பெயர் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அர்த்த ஞானத்துடன் இதை பாராயணம் செய்து வந்தாலும் க்ரமமாக சிரேயஸ்ஸை அடையலாம்.]

**(அவதாரிகை)** ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் அடைந்த தத்வ ஞானி ப்ரஹ்மத்தை ஸ்வஸ்வரூபமாக அநுஸந்தானம் செய்யும் முறையைச் சொல்வதற்காக முதலில் முக்தனின் லக்ஷணத்தைக் கூறுகிறார்:

**अहमेव परं ब्रह्म वासुदेवाख्यमव्ययम् ।**
**इति स्यात् निश्चितो मुक्तो बद्ध एवान्यथा भवेत् ॥ १ ॥**

**அஹமேவ பரம் ப்³ரஹ்ம வாஸுதே³வாக்²யமவ்யயம் ।**
**இதி ஸ்யாத் நிஸ்²சிதோ முக்தோ ப³த்³த⁴ ஏவான்யதா² ப⁴வேத் ॥ 1 ॥**

**वासुदेवाख्यं** = வாஸுதேவர் என்று பெயருள்ளதும்,
**வாஸுதே³வாக்²யம்**

| | | |
|---|---|---|
| **अव्ययं**<br>**அவ்யயம்** | = | அழிவற்றதுமான, |
| **परं ब्रह्म**<br>**பரம் ப்$^{3}$ரஹ்ம** | = | பரப்ரஹ்மமானது, |
| **अहमेव**<br>**அஹமேவ** | = | நான் தான், |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **निश्चितः**<br>**நிஶ்சித꞉** | = | உறுதியான ஞான முள்ளவன், |
| **मुक्तः**<br>**முக்த꞉** | = | முக்தனுக, |
| **स्यात्**<br>**ஸ்யாத்** | = | இருப்பான், |
| **अन्यथा**<br>**அன்யதா$^{2}$** | = | இந்த ஞானம் இல்லாவிடில், |
| **बद्ध एव**<br>**ப$^{3}$த்$^{3}$த$^{4}$ ஏவ** | = | பத்தனுகவே (ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டவனுகவே), |
| **भवेत्**<br>**ப$^{4}$வேத்** | = | இருப்பான். |

உலகில் யாவரும் சரீரம், இந்திரியம், மனம் முதலியவைகளை தன் ஸ்வரூபமாக எண்ணுகிறுர்கள். சிலசமயம் அவை தன்னுடையவை என்றும் நினைக்கின்றனர். இரண்டுவிதத்திலும் அஹங்கார - மமகாரமூலம் சரீராபிமானம் வேறூன்றி யிருப்பதால் சரீரத்தையொட்டி ஏற்படும் இன்ப துன்பங்களை மாறி மாறி அனுபவித்துக்கொண்டு ஸம்ஸாரிகளாக, விடுபடாதவர்களாகவே இருக்கின்றனர். சரீராபிமானமிருக்கும் வரை பத்தர் (கட்டுப்பட்டவர்) தான். எப்பொழுது ஆசார்ய உபதேசத்தால் சரீராபிமானம் நீங்கி, நான் சரீராதிகள் அல்ல, இவை என்னுடையதும் அல்ல, நான் ஸச்சிதானந்தமான ப்ரஹ்மம் என்ற ஞானம் ஏற்பட்டு உறுதிப்படுகிற தோ, அப்பொழுது ஸம்ஸார பந்தம் நீங்கிவிடுகிறது. உலக விஷயங்களால் ஸுகமோ துக்கமோ அவனுக்கு ஏற்படுவதில்லை. அவன்தான் முக்தன்.

இங்கு

**'वासुदेवाख्यं, अव्ययं**

**'வாஸுதே$^{3}$வாக்$^{2}$யம், அவ்யயம்**

(வாஸுதேவாக்யம், அவ்யயம்) என்ற இரு பதங்களாலும், ப்ரஹ்மத்தின் லக்ஷணம் கூறப்படுகிறது.

**वासयतीति वासु: दीव्यतीति देव:**
**वासुश्चासौ देवश्च वासुदेव:**
**வாஸயதீதி வாஸு: தீ³வ்யதீதி தே³வ:**
**வாஸுஶ்சாஸௌ தே³வஶ்ச வாஸுதே³வ:**

வாஸு என்ற பதத்திற்கு எல்லாவற்றையும் வஸிக்கும்படி செய்பவர், இருக்கும்படி செய்பவர் என்பது பொருள். அதாவது எல்லாவற்றிற்கும் ஸத்தையைக் கொடுப்பவர். ஸத்தானபொருள் ஒன்றே. ஆகவே, **वासु** (வாஸு) என்ற பதத்தால் 'ஸத்' என்னும் ப்ரஹ்மலக்ஷணம் கூறப்பட்டது **देव:** - (தேவ:) என்பதற்கு பிரகாசம் உள்ளவர் என்று அர்த்தம். அதனுல் 'சித்' என்னும் லக்ஷணம் கூறப்படுகிறது. தான் ப்ரகாச ரூபமாக இருந்துகொண்டு எல்லாவற்றையும் பிரகாசப் படுத்துபவர். **अव्ययं** - அவ்யயம்) என்ற பதத்தால் 'அநந்தம்' (மூன்றுவித பரிச்சேதமற்றது) என்ற லக்ஷணம் கூறப்படுகிறது. **'सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म'** (ஸத்யம், ஞானம், அனந்தம், ப்ரஹ்ம) என்று தைத்திரீய உபநிஷத்தில் கூறப்படும் ப்ரஹ்மம் நான் என்ற ஞானம் ஏற்படவேண்டும். மேலும்,

**'वासुदेव: सर्वमिति स महात्मा सुदुर्लभ:**
**வாஸுதே³வ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது³ர்லப⁴:**
(கீதை. 7-19)

**सकलमिदमहं व वासुदेव:**
**ஸகலமித³மஹம் வ வாஸுதே³வ:**

என்று கூறியுள்ளபடி எல்லாம் ப்ரஹ்மம். அது நான்தான் என்ற ஞானம் உறுதிப்பட வேண்டும். இதில் ஸந்தேஹமோ, விபரீதமோ கொஞ்சமாவது ஒருபொழுதும் உண்டாகக் கூடாது. அவனே முக்தன். **(1)**

**(அவதாரிகை)** முதல் சுலோகத்தில் முக்தனின் லக்ஷணம் கூறும் முறையில் குருமுகமாக ச்ரவணத்தால் ஏற்படும் தத்வ ஞானத்தைக்காட்டி இப்பொழுது மனன முறையைக் காட்டுகிறுர்: -

**अहमेव परं ब्रह्म निश्चितं चित्त चिन्त्यताम् ।**
**चिद्रूपत्वादसङ्गत्वादबाध्यत्वात्प्रयत्नत: ॥ २ ॥**

**அஹமேவ பரம் ப்³ரஹ்ம நிஶ்சிதம் சித்த சிந்த்யதாம் ।**
**சித்³ரூபத்வாத³ஸங்க³த்வாத³பா³த்⁴யத்வாத்ப்ரயத்னத: ॥ 2 ॥**

**चित्त** = ஹே மனமே!
**சித்த**

| | | |
|---|---|---|
| चिद्रूपत्वात् | = | ஞான வடிவமாயிருப்பதாலும், |
| சித்³ரூபத்வாத் | | |
| असङ्गत्वात् | = | ஒன்றிலும் ஒட்டாததாலும், |
| அஸங்க³த்வாத் | | |
| अबाध्यत्वात् | = | முக்காலும் அழியாமலிருப்பதாலும், |
| அபா³த்⁴யத்வாத் | | |
| अहं | = | நான், |
| அஹம் | | |
| परं ब्रह्मैव | = | பிரஹ்மம் தான் (என்று), |
| பரம் ப்³ரஹ்மைவ | | |
| निश्चितं | = | உறுதியாக, |
| நிஶ்சிதம் | | |
| प्रयत्नतः | = | முயற்சியுடன், |
| ப்ரயத்னத꞉ | | |
| चिन्त्यताम् | = | (உன்னுல்) ஆலோசிக்கப்படட்டும். |
| சிந்த்யதாம் | | |

ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றுதான் என்று ஆசார்யர் உபதேசித்த விஷயத்தில் சிரவணத்தால் ஸந்தேஹம். நீங்கினுலும் வெவ்வேறு லக்ஷணங்களுள்ள இரண்டு பொருள்கள் எப்படி ஒன்ருக இருக்கக்கூடும் என்ற ஆசங்கை (அஸம்பாவனை) மனதில் ஏற்படக்கூடும். இதனுல் ஞானம் உறுதிப்படாது. இதற்காக மனனம் செய்ய வேண்டும். அதாவது தக்க யுக்திகளைக் கண்டுபிடித்து அவைகள் மூலம் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்ருக இருக்கலாம். விரோதமில்லை என்று தீர்மானிக்கவேண்டும். இதுதான் மனனம் என்பது. அதை இங்கு காட்டுகிருர். ப்ரஹ்மஸ்வரூபம் சித்ரூபம் (ஞானவடிவமானது) அஸங்கம் (ஒன்றுடனும் ஒட்டாதது ஒரு தர்மமும் இல்லாதது) அபாத்யம் (ஞானத்தால் மறைந்துபோகாதது, பொய்யல்ல, உண்மையானது) என்று தெரியவருகிறது. நான் என்று கூறப்படும் பொருளை நன்கு பரிசோதித்து சரீராதிகளி லிருந்து விலக்கிப் பார்த்தோமானுல் அதுவும் இதே லக்ஷணங்கள் உள்ளது என்பது தெரியவரும். ஆகையால் இரண்டும் ஒன்றுதான். இவ்வாறு மனனம் மூலம் மனதில் தோன்றும் ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரம் செய்துகொண்டு நானே பரப்ரஹ்மம் என்பதை உறுதிப் படுத்திக்கொள்ளவேண்டும். சிந்தனம் செய்வது மனதின் கார்யமாத லால் ப்ரஹ்மத்தைச் சிந்திக்கும்படி மனதிற்கு உபதேசம் செய்கிருர். **(2)**

(**அவதாரிகை**) மனனத்தைக் கூறிவிட்டு விபரீதத் தோற்றங்கள் ஏற்படாமல் இருக்க நிதித்யாஸனத்தை உபதேசிக்கிறார்: -

**अहमेव परं ब्रह्म न चाहं ब्रह्मणः पृथक् ।**
**इत्येवं समुपासीत ब्राह्मणो ब्रह्मणि स्थितः ॥ ३ ॥**

**அஹமேவ பரம் ப்³ரஹ்ம ந சாஹம் ப்³ரஹ்மண: ப்ருத²க் ।**
**இத்யேவம் ஸமுபாஸீத ப்³ராஹ்மணோ ப்³ரஹ்மணி ஸ்தி²த: ॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **परं ब्रह्म एव** <br> **பரம் ப்³ரஹ்ம ஏவ** | = | பரப்ரஹ்மம்தான், |
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **ब्राह्मण:** <br> **ப்³ராஹ்மண:** | = | ப்ரஹ்மத்தைக் காட்டிலும், |
| **पृथक्** <br> **ப்ருத²க்** | = | வேருக, |
| **न च** <br> **ந ச** | = | இல்லை, |
| **इति एव** <br> **இதி ஏவ** | = | என்று இவ்வாறு, |
| **ब्राह्मण:** <br> **ப்³ராஹ்மண:** | = | பிராஹ்மணன், |
| **ब्रह्मणि स्थित:** <br> **ப்³ரஹ்மணி ஸ்தி²த:** | = | ப்ரஹ்மஸ்வரூபத்தில் இருந்துகொண்டு, |
| **समुपासीत** <br> **ஸமுபாஸீத** | = | தியானம் செய்யவேண்டும். |

குடத்திற்கும் மண்ணுக்கும் பேதம் அபேதம் இரண்டும் உண்டு என்று மற்ற சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. அம்மாதிரி பேதாபேதம் ஜீவனுக்கும் பிரஹ்ம த்திற்கும் கிடையாது, அபேதம் மட்டும்தான், கொஞ்சம்கூட பேதம் கிடையாது என்பதைக் காட்டுவதற்குத்தான் முதலில் நான் ப்ரஹ்மம் என்று கூறிவிட்டு அத்துடன் நிற்காமல் நான் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறு அல்ல என்று தனியாகக் கூறுகிறுர். அல்லது 'நான் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறு அல்ல' என்பதை 'நான் பரப்ரஹ்மம்' என்பதன் வியாக்யானமாகக் கொள்ளலாம். அபேதம் என்பதற்கே வேற்றுமையில்லை என்பதுதான் பொருள். ஜீவன் ப்ரஹ்மம் என்று இரண்டு வஸ்துக் கள் இருந்து இரண்டும் ஒன்றுய் விட்டதாக எண்ணக்கூடாது. வஸ்து ஒன்றுதான். அக்ஞானத்தால் ப்ரஹ்மம் மறைந்து ஜீவனுகத்தோன்றியது. அக்ஞானம் நீங்கியதும் ஜீவஸ்வரூபம் மறைந்து ப்ரஹ்ம ஸ்வரூபம் விளங்குகிறது. வேறு ஒரு பொருளும் மனதில் தோன்றுமல், ப்ரஹ்மஸ்வரூபமே இடைவிடாமல் எப்பொழுதும் மனதில் தோன்றும்படியாக தியானம் செய்யவேண்டும். இடைவிடாமல் ஒரேபொருளை நினைப்பதற்குத்தான் தியானம் என்று பெயர். இந்த நிலையை அடைந்தவனுக்குத்தான் ப்ராஹ்மண்யம் பூர்ணமாகிறது.

**अथ ब्राह्मणः**

**(அத² ப்³ராஹ்மண:)** (பிரு.3-5)

என்று உபநிஷத் இவனை பிரஹ்மணன் என்று கூறுகிறது. பிராஹ்மண்யம் பெற்றதின் பயன் இப்பொழுதுதான் நிறைவேறுகிறது. **(3)**

**(அவதாரிகை)** ப்ரஹ்மத்தின் நிலையைக் கூறுகிறார்: -

**सर्वोपाधिविनिर्मुक्तं चैतन्यं च निरन्तरम् ।**
**तद्ब्रह्माहमिति ज्ञात्वा कथं वर्णाश्रमी भवेत् ॥ ४ ॥**

**ஸர்வோபாதி⁴விநிர்முக்தம் சைதன்யம் ச நிரந்தரம் ।**
**தத்³ப்³ரஹ்மாஹமிதி ஜ்ஞாத்வா கத²ம் வர்ணாஶ்ரமீ ப⁴வேத் ॥ 4 ॥**

| | | |
|---|---|---|
| **सर्वोपाधिविनिर्मुक्तं** **ஸர்வோபாதி⁴விநிர்முக்தம்** | = | எல்லா உபாதிகளிலிருந்தும் விடுபட்டதும், |
| **चैतन्यं** **சைதன்யம்** | = | சைதன்ய ஸ்வரூபமானதும், |
| **निरन्तरं** **நிரந்தரம்** | = | இடைவெளியில்லாததுமான, |
| **तत्** **தத்** | = | அந்த, |
| **ब्रह्म** **ப்³ரஹ்மா** | = | ப்ரஹ்மம், |
| **अहं** **அஹம்** | = | நான், |
| **इति ज्ञात्वा** **இதி ஜ்ஞாத்வா** | = | என்று அறிந்துவிட்டு, |
| **वर्णाश्रमी** **வர்ணாஶ்ரமீ** | = | வர்ணமுள்ளவனாகவும் ஆச்ரமமுள்ளவனாகவும், |
| **कथं** **கத²ம்** | = | எப்படி, |
| **भवेत्** **ப⁴வேத்** | = | இருப்பான்? |

பிராஹ்மண்யம் முதலான வர்ணங்களும், ப்ரஹ்மசர்யம் முதலான ஆச்ரமங்களும் சரீரத்தையொட்டி ஏற்பட்டவை. எவன் அபிமானத்துடன் சரீராதிகளை நான் என்று எண்ணிக்கொள்கிறானோ, அவனைத்தான் பிராஹ்மணன் என்றும் ப்ரஹ்மசாரி

என்றும் கூறலாம். சாஸ்திரத்தில் வர்ணங்களுக்கும் ஆச்ரமங்களுக்கும் விதிக்கப் பட்டுள்ள கட்டுப்பாடுகள் எல்லாம் இவர்களுக்கு உண்டு. அதன்படி நடந்தால் புண்ய மும், மீறி நடந்தால் பாபமும், துன்பமும் ஏற்படும். எல்லாவித அபிமானத்தையும் துறந்து, சரீரம் முதலான எல்லா உபாதிகளிலிருந்தும் தன்ஊன வேறுபடுத்தி எங்கும் நிறைந்த சுத்த சைதன்ய ஸ்வரூபமான ப்ரஹ்மமாக பார்ப்பவன் வர்ணியாகவோ ஆச்ரமியாகவோ ஆக மாட்டான். அவனுக்கு முன்கூறிய கட்டுப்பாடுகள் கிடையாது. நற்கருமங்கஊச் செய்வதால் நன்மையோ, தீவிஊனகஊச் செய்வதால் தீமையோ அவனுக்குக் கிடையாது. அவன் எந்தக் காரியங்கஊச் செய்தபோதிலும் அத்துடன் ஸம்பந்தமில்லாததால் அவனுடைய ஞான நிஊலக்கு ஒரு குறைவும் ஏற்படாது. இதே விஷயத்தை பிருஹதாரண்யக உபநிஷத்தில் கஹோளப்ராஹ்மணத்தில் (3-5)

**स ब्राह्मणः केन स्यात्? येन स्यात् तेन ईदृश एव**

**ஸ ப்³ராஹ்மணः கேன ஸ்யாத்? யேன ஸ்யாத் தேன ஈத்³ருஶ ஏவ**

- அந்த ப்ரஹ்ம ஞானி எவ்விதச் செய்கையுடன் இருப்பான்? எந்தவித ஆசாரத்துட னிருந்தாலும் அவன் ப்ரஹ்மஞானியே) என்று கூறப்பட்டிருக்கிறது. ஞானியும் பழைய வாஸஊனயை அனுஸரித்து நல்வழியில்தான் செல்வான் என்று அங்கு பாஷ்யத்தில் கூறப்பட்டிருக்கிறது. **(4)**

(**அவதாரிகை**) ஞானியின் ப்ரஹ்மானந்த நிஊலயை மாற்ற தேவர்களுக்கும் சக்தி கிடையாது என்பதையும் ஞானம் ஏற்படாதவரை இவன் தேவர்களுக்கு அடிமை என்பதையும் இரு சுலோகங்களால் காட்டுகிறுர்: -

**अहं ब्रह्मास्मि यो वेद स सर्वं भवति त्विदम् ।**
**नाभूत्या ईशते देवास्तेषामात्मा भवेद्धि सः ॥ ५ ॥**

**அஹம் ப்³ரஹ்மாஸ்மி யோ வேத³ ஸ ஸர்வம் ப⁴வதி த்வித³ம் ।**
**நாபூ⁴த்யா ஈஶதே தே³வாஸ்தேஷாமாத்மா ப⁴வேத்³தி⁴ ஸः ॥ 5 ॥**

**अन्योऽसावहमन्योऽस्मीत्युपास्ते योऽन्यदेवताम् ।. :**
**न स वेद नरो ब्रह्म स देवानां यथा पशुः ॥ ६ ॥**

**அன்யோ(அ)ஸாவஹமன்யோ(அ)ஸ்மீத்யுபாஸ்தே யோ(அ)ன்யதே³வதாம் ॥ :**
**ந ஸ வேத³ நரோ ப்³ரஹ்ம ஸ தே³வானும் யதா² பஶு: ॥ 6 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** அஹம் | = | நான், |
| **ब्रह्मा** ப்³ரஹ்மா | = | ப்ரஹ்மமாக, |
| **अस्मि** அஸ்மி | = | இருக்கிறேன் (என்று), |

| | | |
|---|---|---|
| **यः** | = | எவன், |
| **யः** | | |
| **वेद** | = | அறிந்து கொள்கிறனோ, |
| **வேத³** | | |
| **सः** | = | அவன், |
| **ஸः** | | |
| **इदं सर्वं** | = | இது எல்லாமாகவும், |
| **இத³ம் ஸர்வம்** | | |
| **भवति** | = | ஆகிறன், |
| **ப⁴வதி** | | |
| **देवाः** | = | தேவர்கள், |
| **தே³வாः** | | |
| **अभूत्यै** | = | (அவன்) ஞானபலனை அடையாமலிருக்கும் |
| **அபூ⁴த்யை** | | படி செய்ய, |
| **न ईशते** | = | திறமையற்றவர்கள், |
| **ந ஈஶதே** | | |
| **हि** | = | ஏனெனில், |
| **ஹி** | | |
| **सः** | = | அவன், |
| **ஸः** | | |
| **तेषां** | = | அந்த தேவர்களுக்கு, |
| **தேஷாம்** | | |
| **आत्मा** | = | ஆத்மாவாக, |
| **ஆத்மா** | | |
| **भवेत्** | = | ஆய்விடுவான். |
| **ப⁴வேத்** | | |
| **असौ** | = | அந்த தேவர், |
| **அஸௌ** | | |
| **अन्यः** | = | (என்னைக்காட்டிலும்) வேறனவர், |
| **அன்யः** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **अस्मि** | = | (அவரைக்காட்டிலும்) வேறக, |
| **அஸ்மி** | | |

अस्मि = இருக்கிறேன்,
அஸ்மி
इति = என்று,
இதி
यः = எவன்,
யः
अन्यदेवताम् = தன்னைக்காட்டிலும் வேறான தேவதையை,
அன்யதே³வதாம்
उपास्ते = ஆராதிக்கிறானோ,
உபாஸ்தே
स नरः = அந்த மனிதன்,
ஸ நரः
ब्रह्म = பிரஹ்மத்தை,
ப்³ரஹ்ம
न वेद = அறியமாட்டான்,
ந வேத³
सः = அவன்,
ஸ
देवानां = தேவர்களுக்கு,
தே³வானும்
यथा पशुः = பசுபோல இருப்பான்.
யதா² பஶுः

பிருஹதாரண்யகம் முதல் அத்யாயம் 4 வது பிராஹ்மணத்திலுள்ள மந்திரத்தின் கருத்து இந்த இரு சுலோகங்களில் காட்டப்படுகிறது. அதாவது: ஒவ்வொரு மனிதனும் தேவர்களுக்குக் கடன்பட்டே பிறக்கிறான். இந்தக்கடனை, தேவர்களைக்குறித்து யாகம் செய்வதாலும், பூஜை செய்வதாலும் தீர்க்கவேண்டும். யாகத்தில் தேவர்களைக் குறித்து ஹவிஸ்ஸைக் கொடுப்பதாலும், அவர்களைப் பூஜிப்பதாலும் போகத்தையும் திருப்தியையும் உண்டு பண்ணுகிறான். இது மனிதனின் கடமை. ஸந்தோஷம் அடைந்த அவர்கள் இவனுக்கு போகத்தை அருளுகின்றனர். தேவர்களுக்கு பிரீதி ஏற்படும்படி நடந்து கொள்ளாவிட்டால் கோபம் அடைந்து இடைஞ்சல் செய்வார்கள். ஆரம்பித்த காரியம் நிறைவேறாது. செய்த காரியத்தின் பலனும் கிட்டாது. ஆகவே மனிதன் தேவர்கள் விஷயத்தில் பசுவின் நிலையைத்தான் அடைகிறான். பசுவானது தன்னை வளர்க்கும் யஜமானனுக்கு பாலைக்கொடுத்து போகத்தை உண்டுபண்ணுகிறது. அவனும் ஸந்தோஷம் கொண்டு அதற்கு உணவும், மற்றும் சௌகர்யங்களும் செய்து கொடுக்கிறான். அதிலும் ஒரே யாகத்தில். பல தேவதைகளுக்கு ஹவிஸ்ஸைக் கொடுப்பதால் ஒவ்வொரு மனிதனும் அநேக தேவதைகளுடைய பசுவாக ஆகின்றான். ப்ரஹ்மஞானம் பெறாமல் அக்ஞானத்தால்

தன்னை வேறாகவும் தேவதையை வேறாகவும் எண்ணிக்கொண்டிருக்கும்வரை இந்தப் பசுவின் நிலை மனிதனுக்கு நீங்காது.

இவர்களில் எவனாவது ஒருவன் ஸர்வஸங்க பரித்யாகம் செய்து ஸந்யாஸாச்ரம ஸ்வீகாரம் செய்து கொண்டு ஞானமார்க்கத்தில் செல்வானே ஆகில் பின்னால் அவன் யாகம் செய்யப்போவதில்லை. அவனிடமிருந்து தேவர்களுக்கு போகம் கிடைக்காது. இது தேவர்களுக்குப் பிடித்தமானது அல்ல. இதற்கு இடம் கொடுக்க மாட்டார்கள். எத்தனையோ இடையூறுகளைச் செய்வார்கள். நூற்றுக்கணக்கான பசுக்களை உடைய ஒரு மனிதன் தன்னைவிட்டு ஒரு பசுகூட பிரிந்து செல்வதை விரும்பமாட்டான். அப்படியிருக்க பல தேவர்களுக்கு போகத்தைக்கொடுத்துக் கொண்டிருக்கும் மனிதன் தங்களைவிட்டுப் பிரிந்து செல்வதை அவர்கள் பொறுத்துக் கொண்டிருப்பார்களா? எத்தனையோ இடையூறுகள் செய்து போகவொட்டாமல் தடுப்பார்கள்.

ஆனாலும் இந்த நிலையில் ப்ரஹ்மஞானம் இல்லாததால் பேதபுத்தி இருக்கும், ஸுகதுக்கங்கள் மாறி மாறி வரும். சாச்வதமான ஆனந்தம் இருக்காது.. இதுவும் பந்தநிலை தான் எப்படியும் இதை விட்டு மேலே செல்லவேண்டும். ஆகையால் சிரத்தையுடனும் பக்தியுடனும். தேவர்களை ஆராதித்து அவர்களுக்கு பிரீதியை உண்டுபண்ணி அவர்களிடமே ஞானம் கிடைக்க அனுக்ரஹிக்கும்படி பிரார்த்திக்க வேண்டும். வேறு பலனைக் கேட்கக்கூடாது. அவர்களும் பிரீதியுடன், இடையூறு செய்யாமல் ஒத்தாசை புரிவார்கள். ஞானம் கிடைக்கும்வரை தேவதைகளின் அனுக்ரஹத்தை பிரார்த்திக்கவேண்டும். சிரத்தையுடனும் தேவதானுக்ரஹத்துடனும் தீவ்ரமான முயற்சிசெய்து ஞானவழியில் சென்று குருவின் அனுக்ரஹத்தால் ஞானத்தை அடைந்து விட்டால் அதன்பின் இவனை தேவர்கள் ஒன்றும் செய்ய முடியாது. இடையூறும் செய்யமுடியாது. ஞானத்தின் பலனை உடனே அடைந்தே தீருவான். யாரும் தடுக்க முடியாது. கர்மாக்களைச் செய்த உடன் பலன் கிடைப்ப தில்லை. பின்னால்தான் கிடைக்கும். அங்கு தேவர்கள் விக்நம் செய்யக்கூடும். ஸூர்ய வெளிச்சத்தில் கண்ணைத் திறந்து பார்த்தவுடன் எதிரிலுள்ள பொருள் உடனே விளங்குவதுபோல ஞானம் வந்தவுடனேயே அக்ஞானம் விலகி ப்ரஹ்மாத்மபாவம் ஏற்பட்டுவிடுகிறபடியால் இங்கு விக்நம் செய்வதற்கு இடமில்லை. மேலும் தேவர்களையும் தன் ஸ்வரூபமாகப் பார்க்கும் ஞானியிடம் அவர்கள் ஒன்றும் செய்ய மாட்டார்கள். **(5-6)**

**(அவதாரிகை)** ஞானியின் அனுபவத்தைக் காட்டுகிறார்: -

**अहमात्मा न चान्योऽस्मि ब्रह्मैवाहं न शोकभाक् ।**
**सच्चिदानन्दरूपोऽहं नित्यमुक्तस्वभाववान् ॥ ७ ॥**

**அஹமாத்மா ந சான்யோ(அ)ஸ்மி ப்³ரஹ்மைவாஹம் ந ஶோகபா⁴க் ।**
**ஸச்சிதா³னந்த³ரூபோ(அ)ஹம் நித்யமுக்தஸ்வபா⁴வவான் ॥ 7 ॥**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **आत्मा**<br>**ஆத்மா** | = | பிரத்யகாத்மவஸ்து, |
| **अन्यः**<br>**அன்யː** | = | வேறுக, |
| **न चास्मि**<br>**ந சாஸ்மி** | = | இல்லை, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **ब्रह्मैव**<br>**ப்³ரஹ்மைவ** | = | பிரஹ்மமே, |
| **न शोकभाक्**<br>**ந ஶோகபா⁴க்** | = | சோகத்தை அடைபவனல்ல, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **सच्चिदानन्दरूपः**<br>**ஸச்சிதா³னந்த³ரூபː** | = | ஸச்சிதானந்தஸ்வரூபி, |
| **नित्यमुक्तस्वभाववान्**<br>**நித்யமுக்தஸ்வபா⁴வவான்** | = | எப்பொழுதும் விடுபட்ட ஸ்வரூபமுள்ளவன். |

சரீராதிகளை நான் என்று எண்ணும்வரை தான் இஷ்டமான பொருள் தன்னை விட்டுப் பிரியும்பொழுது சோகம் ஏற்படுகிறது. எல்லாமாக விளங்கும் ஸச்சிதானந்த ப்ரஹ்மம் நான் என்ற ஞானம் ஏற்பட்டுவிட்டால் தன்னைத்தவிற வேறு பொருளே இல்லாததால் சோகத்திற்கு இடமில்லை. மேலும் ஸம்ஸார பந்தம் எல்லாம் உண்மையில் அஸங்கமான ஆத்மாவிற்குக் கிடையாது. அது மனத்திற்குத்தான். மனத்துடன் ஒன்றுகச் சேர்ந்திருப்பதால் அக்ஞானத்தால் ஆத்மாவிற்கும் பந்தமிருப்ப தாக எண்ணி ஞானம் வந்தவுடன் பந்தம் நீங்கி முக்தி ஏற்பட்டதாக நினைக்கிறுன். அக்ஞானத்தால் இவன் நினைப்பதைத் தவிற உண்மையில் ஆத்மாவில் பந்தமோ, மோக்ஷமோ ஒன்றும் கிடையாது. அது நித்ய முக்தவஸ்து **(7)**

(**அவதாரிகை**) ஞானிக்கு புண்யபாப ஸம்பந்தம் கிடையாது என்று கூறுகிறுர்:

**आत्मानं सततं ब्रह्म संभाव्य विहरन्ति ये ।**
**न तेषां दुष्कृतं किंचिद्दुष्कृतोत्था न चापदः ॥ ८ ॥**
**आत्मानं सततं ब्रह्म संभाव्य विहरेत्सुखम् ॥ ९ ॥**

**ஆத்மானம் ஸததம் ப்³ரஹ்ம ஸம்பா⁴வ்ய விஹரந்தி யே ।**
**ந தேஷாம் து³ஷ்க்ருதம் கிஞ்சித்³து³ஷ்க்ருதோத்தா² ந சாபத³꞉ ॥ 8 ॥**
**ஆத்மானம் ஸததம் ப்³ரஹ்ம ஸம்பா⁴வ்ய விஹரேத்ஸுக²ம் ॥ 9 ॥**

**सततं** = எப்பொழுதும்,

**ஸததம்**

**आत्मानं** = தன்னை,

**ஆத்மானம்**

**ब्रह्म** = ப்ரஹ்மமாக,

**ப்³ரஹ்ம**

**संभाव्य** = எண்ணி,

**ஸம்பா⁴வ்ய**

**ये** = எவர்கள்,

**யே**

**विहरन्ति** = ஸஞ்சரிக்கின்றனரோ,

**விஹரந்தி**

**तेषां** = அவர்களுக்கு,

**தேஷாம்**

**दुष्कृतं** = பாபம்,

**து³ஷ்க்ருதம்**

**किंचित्** = கொஞ்சமும்,

**கிஞ்சித்**

**न** = கிடையாது,

**ந**

**दुष्कृतोत्था:** = பாபங்களிலிருந்து உண்டாகும்,

**து³ஷ்க்ருதோத்தா²**

**आपद:** = துன்பங்களும்,

**ஆபத³꞉**

**न** = கிடையாது,

**ந**

(ஆகையால்)

**आत्मानं** = தன்னை,

**ஆத்மானம்**

**सततं** = எப்பொழுதும்,

**ஸததம்**

| | | |
|---|---|---|
| **ब्रह्म** ப்³ரஹ்ம | = | ப்ரஹ்மஸ்வரூபமாக, |
| **संभाव्य** ஸம்பா⁴வ்ய | = | எண்ணி, |
| **सुखं** ஸுரவம் | = | ஆனந்தமாக, |
| **विहरेत्** விஹரேத் | = | ஸஞ்சரிக்கவேண்டும். |

இந்த சுலோகத்தில் ஜீவன்முக்தனிடம் ஆகாமிகர்மா ஒட்டுவதில்லை என்பதைக் கூறுகிறுர். சரீராதிகளில் அபிமானம் கொண்டு 'நான் செய்கிறேன்' என்ற எண்ணத்துடன் செய்பவனுக்குத்தான் அவன் செய்யும் கர்மாக்களால் பாபம் ஏற்பட்டு அதன்மூலம் துன்பம் ஏற்படுகிறது. ஞானம் அடைந்துள்ள ஜீவன்முக்தனுக்கு சரீராபிமானம் இல்லை. ப்ரஹ்மத்தையே தன் ஸ்வரூபமாகப் பார்க்கிறுன். சரீரம் செய்யும் காரியத்தில் நான் செய்கிறேன் என்ற எண்ணம் இல்லை. ஆதலால் அவன் உலகில் ஸஞ்சரிக்கும்பொழுது ஏதாவது சாஸ்திர விருத்தமான காரியம் செய்த போதிலும் அதனுல் அவனுக்குப் பாபம் ஏற்படுவதில்லை. பாபபலனுன துன்பமும் அவனுக்குக் கிடையாது. இந்த சுலோகத்தில் **दुष्कृतं** (**து³ஷ்க்ருதம்**) என்பதால் புண்யத்தையும் **आपदः** (**ஆபத³:**) என்பதால் ஸம்பத்தையும் பொருளாகக்கொள்ள வேண்டும். ப்ரஹ்மானந்தத் தை அநுபவிக்கும் ஞானிக்கு வைஷயிகஸுகமும் துன்பம்தான். அதற்கு ஸாதன மான புண்யமும் பாபமாகத்தான் ஆகும். ஞானம் அடைந்த பிறகு செய்யும் கர்மாக்களால் இன்பமோ துன்பமோ ஒன்றும் ஏற்படுவதி ல்லை என்று கருத்து. **(8-9)**

**(அவதாரிகை)** ப்ரஹ்மத்யானத்தின் பெருமையைக் காட்டுகிறுர்: -

**क्षणं ब्रह्माहमस्मीति यः कुर्यादात्मचिन्तनम् ।**
**तन्महापातकं हन्ति तमः सूर्योदयो यथा ॥ १० ॥**

**க்ஷணம் ப்³ரஹ்மாஹமஸ்மீதி ய: குர்யாதா³த்மசிந்தனம் ।**
**தன்மஹாபாதகம் ஹந்தி தம: ஸூர்யோத³யோ யதா² ॥ 10 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** அஹம் | = | நான், |
| **ब्रह्म अस्मि** ப்³ரஹ்மா அஸ்மி | = | ப்ரஹ்மமாக இருக்கிறேன், |
| **इति** இதி | = | என்று, |

| | | |
|---|---|---|
| **क्षणं**<br>**க்ஷணம்** | = | சிறிது நேரம், |
| **यः**<br>**ய:** | = | எவனொருவன், |
| **आत्म चिन्तनं**<br>**ஆத்ம சிந்தனம்** | = | ஆத்மத்யானத்தை, |
| **कुर्यात्**<br>**குர்யாத்** | = | செய்வானேயாகில், |
| **सूर्योदयः**<br>**ஸூர்யோத³ய:** | = | ஸூர்யனின் உதயம், |
| **यथा तमः**<br>**யதா² தம:** | = | இருளை நீக்குவது போல், |
| **तत्**<br>**தத்** | = | அந்த ப்ரஹ்மத்யானம், |
| **महापातकं**<br>**மஹாபாதகம்** | = | மஹாபாபத்தை, |
| **हन्ति**<br>**ஹந்தி** | = | அழித்துவிடுகிறது. |

ஏதோ ப்ரதிபந்தக வசத்தால் ஞானம் வராதபோதிலும் சிறிது நேரமாவது உலகத்தையும் தன்னையும் மறந்து முன் சொன்ன விதமாக நான் ப்ரஹ்மஸ்வரூபம் என்று ஆத்ம ஸ்வரூபத்தை தியானம் செய்தால் இடைஞ்சலாக உள்ள மஹாபாபம் விலகிவிடும். பிறகு ஞானமும் ஏற்படும். **(10)**

(**அவதாரிகை**) ஜீவப்ரஹ்மைக்யத்தைக் கூறிவிட்டு அத்வைத ஸித்திக்காக பிரபஞ்சஸிருஷ்டி பிரளயங்களைக் கூறுகிறார்: -

**अज्ञानाद्ब्रह्मणो जातमाकाशं बुदबुदोपमम् ।**
**आकाशाद्वायुरुत्पन्नो वायोस्तेजस्ततः पयः ॥ ११ ॥**

**அஜ்ஞாநாத்³ப்³ரஹ்மணோ ஜாதமாகாஶம் பு³த³பு³தோ³பமம் ।**
**ஆகாஶாத்³வாயுருத்பன்னோ வாயோஸ்தேஜஸ்தத: பய: ॥ 11 ॥**

**अद्भयश्च पृथिवी जाता ततो व्रीहियवादिकम् ।**
**पृथिव्यप्सु पयो वह्नौ वह्निर्वाय नमस्यसौ ।**
**नभोऽप्यव्याकृते तच्च शुद्धे शुद्धोऽस्म्यहं हरिः ॥ १२ ॥**

**அத்³ப⁴யஶ்ச ப்ருதி²வீ ஜாதா ததோ வ்ரீஹியவாதி³கம் ।**
**ப்ருதி²வ்யப்ஸூ பயோ வஹ்னெள வஹ்நிர்வாய நமஸ்யஸௌ ।**
**நபோ⁴(அ)ப்யவ்யாக்ருதே தச்ச ஶுத்³தே⁴ ஶுத்³தோ⁴(அ)ஸ்ம்யஹம் ஹரி꞉ ॥ 12 ॥**

| | | |
|---|---|---|
| **ब्रह्मण:** ப்³ரஹ்மண꞉ | = | ப்ரஹ்மத்திலிருந்து, |
| **अज्ञानात्** அஜ்ஞானத் | = | மாயையால், |
| **बुदबुदोपमं** பு³த³பு³தோ³பமம் | = | நீர்க்குமிழிக்கு ஒப்பான, |
| **आकाशं** ஆகாஶம் | = | ஆகாசம், |
| **जातं** ஜாதம் | = | உண்டானது, |
| **आकाशात्** ஆகாஶாத் | = | ஆகாசத்திலிருந்து, |
| **वायु:** வாயு꞉ | = | வாயு, |
| **उत्पत्र:** உத்பத்ர꞉ | = | உண்டானது., |
| **वायो:** வாயோ꞉ | = | வாயுவிலிருந்து, |
| **तेज:** தேஜ꞉ | = | தேஜஸ்ஸும், |
| **तत:** தத꞉ | = | அதிலிருந்து, |
| **पय:** பய꞉ | = | ஜலமும் (உண்டானது) |
| **अद्भय:** அத்³ப்⁴ய꞉ | = | ஜலத்திலிருந்து, |
| **पृथिवी च** ப்ருதி²வீ ச | = | பிருதிவியும், |
| **जाता** ஜாதா | = | உண்டானது, |
| **तत:** தத꞉ | = | அதிலிருந்து, |

| | | |
|---|---|---|
| व्रीहियवादिकं<br>வ்ரீஹியவாதி³கம் | = | நெல், யவம் முதலானவை<br>(உண்டானது). |
| पृथिवी<br>ப்ருதி²வீ | = | பூமி, |
| अम्सु<br>அம்ஸு | = | ஜலத்திலும், |
| पयः<br>பய: | = | ஜலம், |
| वह्नौ<br>வஹ்னௌ | = | தேஜஸ்ஸிலும், |
| वह्निः<br>வஹ்னி: | = | தேஜஸ், |
| वायौ<br>வாயௌ | = | வாயுவிலும், |
| असौ<br>அஸௌ | = | அந்த வாயு, |
| नभसि<br>நப⁴ஸி | = | ஆகாசத்திலும், |
| नभोपि<br>நபோ⁴பி | = | ஆகாசமும், |
| अव्याकृते<br>அவ்யாக்ருதே | = | அவ்யாக்ருதம் என்ற மாயையிலும், |
| तच्च<br>தச்ச | = | அதுவும், |
| शुद्धे<br>ஶுத்³தே⁴ | = | சுத்தமான ப்ரஹ்மத்திலும் (லயம்<br>அடைகிறது), |
| शुद्धः<br>ஶுத்³த⁴: | = | (கடைசியில் மிஞ்சிய) சுத்தமான, |
| हरिः<br>ஹரி: | = | ஹரியாக, |
| अहं<br>அஹம் | = | நான், |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன். |

இதுவரையிலும் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒரே தத்வம்தான் என்பது கூறப்பட்டது. இதனுல் சேதனம் ஒன்றுதான் என்பது தெரியவந்தது. இதனுல் மட்டும் அத்வைத நிஜலயோ, அபயமோ, பரமானந்த நிஜலயோ பூர்ணமாக ஏற்படாது. ஜடபிரபஞ்சம் நம்மைக்காட்டிலும் வேருக இருக்கும்வரை நமக்கு பயம் விலகாது. அதற்காக பிரபஞ்சத்தின் ஸ்வரூபத்தை விளக்கிக் கூறுகிருர். பரமாத்ம ஸ்வரூபத்திலிருந்து மாயையால் முதலில் தோன்றியது ஆகாசம். பிறகு வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவி என்ற முறையில் பிரபஞ்சம் உண்டாயிருக்கிறது. கடைசியில் பிருதிவி ஜலத்தில், ஜலம் தேஜஸ்ஸில், தேஜஸ் வாயுவில், வாயு ஆகாசத்தில், ஆகாசம் மாயையில், மாயை சுத்த பிரஹ்மத்தில் என்ற முறையில் லயத்தை அடைகிறது. ஆகவே பிரபஞ்சம் ப்ரஹ்மத்திலிருந்து உத்பத்தியாகி அதிலேயே லயமடைவதால் ப்ரஹ்மம் உபாதான காரணம் ஆகிறது. காரணத்தைக்காட்டிலும் காரியம் வேறு அல்ல. நீரில் தோன்றும் குமிழி நீரிலேயே உண்டாகி அதிலேயே இருந்து அதிலேயே மறைவதால் அது நீரைக்காட்டிலும் வேறு அல்ல. அதுபோல மாயையால் ப்ரஹ்மத்திலிருந்து தோன்றும் பிரபஞ்சமும் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு அல்ல. அந்த சுத்த ப்ரஹ்மம் நான்தான். ஆகையால் என்ஜனத்தவிற இரண்டாவது பொருள் சேதனமோ ஜடமோ ஒன்றும் உண்மையில் இல்ஜல. நான் அத்வைத வஸ்து. இவ்வித ஞானம் உள்ளவனுக்கு இரண்டாவது பொருள் இல்லாததால் பயம் ஏற்படாது. ப்ரஹ்மானந்த நிஜலயை அடைகிருன். **(11-12)**

**(அவதாரிகை)** விதிமுகமாகவும் நிஷேத முகமாகவும் ப்ரஹ்மாநுஸந்தானம் செய்யும் முறையை ஐந்து சுலோகங்களால் காட்டுகிருர்: -

## अहं विष्णुरहं विष्णुरहं विष्णुरहं हरिः ।
## कर्तृभोक्त्रादिकं सर्वं तदविद्योत्थमेव च ॥ १३ ॥

**அஹம் விஷ்ணுரஹம் விஷ்ணுரஹம் விஷ்ணுரஹம் ஹரிः ।**
**கர்த்ருபோ⁴க்த்ராதி³கம் ஸர்வம் தத³வித்³யோத்த²மேவ ச ॥ 13 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** அஹம் | = | நான், |
| **विष्णुः** விஷ்ணு: | = | விஷ்ணு (எங்கும் நிறைந்தவன்), |
| **अहं** அஹம் | = | நான், |
| **विष्णुः** விஷ்ணு: | = | விஷ்ணு |
| **अहं** அஹம் | = | நான், |
| **विष्णुः** விஷ்ணு: | = | விஷ்ணு |

| | | |
|---|---|---|
| **अहं** **அஹம்** | = | நான், |
| **हरिः** **ஹரிः** | = | ஹரி, |
| **कर्तृभोक्त्रादिकं सर्वं** **கர்த்ருபோ⁴க்த்ராதி³கம் ஸர்வம்** | = | செய்கிறவன், அனுபவிக்கிறவன் என்பதெல்லாம், |
| **तदविद्योत्थमेव** **தத³வித்³யோத்த²மேவ** | = | அவனுடைய அவித்யையால் ஏற்பட்டதே. |

விஷ்ணு என்றும் ஹரி என்றும் கூறப்படும் ப்ரஹ்மம் நான் தான் என்பதை மூன்றுதடவை கூறி உறுதிப்படுத்துகிறுர். அவித்யையால் தன்ஙை ப்ரஹ்மஸ்வரூப மாகத் தெரிந்துகொள்ளாமல் கர்த்தாவாகவும் (காரியங்களைச் செய்பவனுகவும்) போக்தாவாகவும் (அதன் பயனை அனுபவிப்பவனுகவும்) அறியாமையால் எண்ணு கின்றனர். இவைகள் எல்லாம் புத்தியைச் சேர்ந்தவை. புத்தியுடன் ஒன்றுகி அதையே நான் என்று எண்ணுவதால் இந்த விபரீத ஞானம் ஏற்பட்டிருக்கிறது. அக்ஞானம் நீங்கி புத்தியைக் காட்டிலும் வேறுக தன்ஙை அறிந்தவன் கர்த்தாவாகவும் போக்தாவாகவும் எண்ணமாட்டான். அகண்ட ஸச்சிதானந்த ப்ரஹ்மமாகவே நினைப்பான். **(13)**

## अच्युतोऽहमनन्तोऽहं गोविन्दोऽहमहं हरिः ।
## आनन्दोऽहमशेषोऽहमजोऽहममृतोऽस्म्यहम् ॥ १४ ॥

**அச்யுதோ(அ)ஹமனந்தோ(அ)ஹம் கோ³விந்தோ³(அ)ஹமஹம் ஹரிः ।**
**ஆனந்தோ³(அ)ஹமஶேஷோ(அ)ஹமஜோ(அ)ஹமம்ருதோ(அ)ஸ்ம்யஹம் ॥ 14 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** **அஹம்** | = | நான், |
| **अच्युतः** **அச்யுதः** | = | அச்யுதன் (தன் நிலையிலிருந்து வழுவாதவன்), |
| **अहं** **அஹம்** | = | நான், |
| **अनन्तः** **அனந்தः** | = | அனந்தன் (தேசம், காலம், வஸ்து என்ற மூன்று எல்லைகளும் அற்றவன்), |
| **अहं** **அஹம்** | = | நான், |
| **गोविन्दः** **கோ³விந்த³ः** | = | கோவிந்தன், |
| **अहं** **அஹம்** | = | நான், |

**हरिः** = ஹரி,

**ஹரிः**

**अहं** = நான்,

**அஹம்**

**आनन्दः** = ஆனந்தம்,

**ஆனந்த$^{3}$ः**

**अहं** = நான்,

**அஹம்**

**अशेषः** = எல்லாம்,

**அஶேஷः**

**अहं** = நான்,

**அஹம்**

**अहं** = நான்,

**அஹம்**

**अजः** = பிறப்பு அற்றவன்,

**அஜः**

**अहं** = நான்,

**அஹம்**

**अमृतः** = மரணம் இல்லாதவனாக,

**அம்ருதः**

**अस्मि** = இருக்கிறேன்.

**அஸ்மி**

**नित्योऽहं निर्विकल्पोऽहं निराकारोऽहमव्ययः ।**
**सच्चिदानन्दरूपोऽहं पञ्चकोशातिगोऽस्म्यहम् ॥ १५ ॥**

**நித்யோ(அ)ஹம் நிர்விகல்போ(அ)ஹம் நிராகாரோ(அ)ஹமவ்யயः ।**
**ஸச்சிதா$^{3}$னந்த$^{3}$ரூபோ(அ)ஹம் பஞ்சகோஶாதிகோ$^{3}$(அ)ஸ்ம்யஹம் ॥ 15 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**नित्यः** = பிறப்பு இறப்பு அற்றவன் (எப்பொழுதும் இருப்பவன்),

**நித்யः**

**अहं** = நான்,

**அஹம்**

**निर्विकल्पः** = வேற்றுமை அற்றவன்,

**நிர்விகல்பः**

| | | |
|---|---|---|
| अहं<br>அஹம் | = | நான், |
| निराकार:<br>நிராகார: | = | உருவமற்றவன், |
| अव्यय:<br>அவ்யய: | = | குறைவு அற்றவன், |
| अहं<br>அஹம் | = | நான், |
| सच्चिदानन्दरूप:<br>ஸச்சிதா³னந்த³ரூப: | = | ஸத்தாயும் சித்தாயும் ஆனந்தமாகவும் இருப்பவன், |
| अहं<br>அஹம் | = | நான், |
| पञ्चकोशातिग:<br>பஞ்சகோஶாதிக³: | = | அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்து கோசங்களுக்கும் அப்பாற்பட்டவனாக, |
| अस्मि<br>அஸ்மி | = | இருக்கிறேன். |

(15)

**अकर्ताऽहमभोक्ताऽहमसङ्ग: परमेश्वर: ।**
**सदा मत्सन्निधानेन चेष्टते सर्वमिन्द्रियम् ॥ १६ ॥**

**அகர்தா(அ)ஹமபோ⁴க்தா(அ)ஹமஸங்க³: பரமேஶ்வர: ।**
**ஸதா³ மத்ஸந்நிதா⁴னேன சேஷ்டதே ஸர்வமிந்த்³ரியம் ॥ 16 ॥**

| | | |
|---|---|---|
| अहं<br>அஹம் | = | நான், |
| अकर्ता<br>அகர்தா | = | (ஒன்றையும்) செய்யாதவன், |
| अहं<br>அஹம் | = | நான், |
| अभोक्ता<br>அபோ⁴க்தா | = | அநுபவியாதவன், (நான்) |
| असङ्ग:<br>அஸங்க³: | = | ஒன்றிலும் ஒட்டாத, |
| परमेश्वर:<br>பரமேஶ்வர: | = | பரமேசுவரன், |
| सदा<br>ஸதா³ | = | எப்பொழுதும், |

| | | |
|---|---|---|
| **मत्सन्निधानेन** <br> **மத்ஸந்நிதா⁴னேன** | = | நான் அருகில் இருப்பதால், |
| **सर्वं इन्द्रियं** <br> **ஸர்வம் இந்த்³ரியம்** | = | எல்லா இந்திரியமும், |
| **चेष्टते** <br> **சேஷ்டதே** | = | வேலை செய்கிறது. |

ஒரு காரியத்தைச் செய்வதற்கும் அதன் பயனை அநுபவிப்பதற்கும் பிறவஸ்துவுடன் ஸம்பந்தம் இருக்க வேண்டும். ஆத்மா ஒரு வஸ்துவுடனும் ஸம்பந்தப்படாததால் அது கர்த்தாவும் அல்ல, போக்தாவும் அல்ல. ஆனாலும் ஆத்மா இருப்பதால் தான் எல்லாம் அதனதன் வேலையைச் செய்கிறது. காந்தத்தின் அருகில் இரும்பு அசைவதுபோல் ஆத்ம ஸந்நிதியில் இந்திரியங்கள் வேலை செய்கின்றன. ஆத்ம சக்தியால்தான் கண் பார்க்கிறது, காது கேட்கிறது. மற்ற இந்திரியங்களும் அதனதன் வேலைகளைச் செய்கின்றன. இதைக்கொண்டு ஆத்மாவே செய்வதாகத் தவறுதலாக எண்ணி விடுகிறோம். காந்தம்போல ஆத்மா இருக்கிறது என்பதைத்தவிற இந்திரியங்களின் காரியங்களில் அதற்கு ஒருவித ஸம்பந்தமும் இல்லை. அது அஸங்கம். **(16)**

**आदिमध्यान्तमुक्तोऽहं न बद्धोऽहं कदाचन ।**
**स्वभावनिर्मलः शुद्धः स एवाहं न संशयः ॥ १७ ॥**

**ஆதி³மத்⁴யாந்தமுக்தோ(அ)ஹம் ந ப³த்³தோ⁴(அ)ஹம் கதா³சன ।**
**ஸ்வபா⁴வநிர்மலঃ ஶுத்³த⁴ঃ ஸ ஏவாஹம் ந ஸம்ஶய: ॥ 17 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **आदिमध्यान्तमुक्तः** <br> **ஆதி³மத்⁴யாந்தமுக்த:** | = | ஆதி, மத்யம், முடிவு மூன்றும் அற்றவன், |
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **कदाचन** <br> **கதா³சன** | = | ஒருபொழுதும், |
| **न बद्धः** <br> **ந ப³த்³த⁴:** | = | கட்டுப்பட்டவனில்லை, |
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **स्वभावनिर्मलः** <br> **ஸ்வபா⁴வநிர்மல:** | = | இயற்கையிலேயே அழுக்கு அற்றவனும், |
| **शुद्धः** <br> **ஶுத்³த⁴:** | = | பரிசுத்தனுமான, |

**स एव** = அந்த பரமாத்மாவே,

**ஸ ஏவ**

**न संशयः** = ஸந்தேஹமில்லை.

**ந ஸம்ஶய:**

(**அவதாரிகை**) இதுவரை ப்ரஹ்ம ஸ்வரூபத்தை விளக்கி ஞானி ப்ரஹ்மானு ஸந்தானம் செய்யும் முறையையும் காட்டினர். இனி ஞானம் பெறாதவனும் அந்த நிலையை அடைவதற்கு உபாயம் கூறுகிறார்: -

**ब्रह्मैवाहं न संसारी मुक्तोऽहमिति भावयेत् ।**
**अशक्नुवन्भावयितुं वाक्यमेतत्सदाऽभ्यसेत् ॥ १८ ॥**

**ப்³ரஹ்மைவாஹம் ந ஸம்ஸாரீ முக்தோ(அ)ஹமிதி பா⁴வயேத் ।**
**அஶக்னுவன்பா⁴வயிதும் வாக்யமேதத்ஸதா³(அ)ப்⁴யஸேத் ॥ 18 ॥**

**यदभ्यासेन तद्भावो भवेद्भ्रमरकीटवत् ।**
**अत्रापहाय सन्देहमभ्यसेत्कृतनिश्चयः ॥ १९ ॥**

**யத³ப்⁴யாஸேன தத்³பா⁴வோ ப⁴வேத்³ரமரகீடவத் ।**
**அத்ராபஹாய ஸந்தே³ஹமப்⁴யஸேத்க்ருதநிஶ்சய: ॥ 19 ॥**

(ஞானம் பெறாதவரும்),

**अहं** = நான்,

**அஹம்**

**ब्रह्मैव** = ப்ரஹ்மமே,

**ப்³ரஹ்மைவ**

**न संसारी** = ஸம்ஸாரி அல்ல,

**ந ஸம்ஸாரீ**

**अहं** = நான்,

**அஹம்**

**मुक्तः** = (எல்லா பந்தங்களிலிருந்தும்) விடுபட்டவன்,

**முக்த:**

**इति** = என்று,

**இதி**

**भावयेत्** = த்யானம் செய்யவேண்டும்,

**பா⁴வயேத்**

**भावयितुं** = தியானம் செய்வதற்கு,

**பா⁴வயிதும்**

| | | |
|---|---|---|
| **अशक्नुवन्** <br> **அஶக்னுவன்** | = | ஸாமர்த்தியம் இல்லாதவன், |
| **एतत् वाक्यं** <br> **ஏதத் வாக்யம்** | = | இந்த வாக்யத்தை, |
| **सदा** <br> **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **अभ्यसेत्** <br> **அப்⁴யஸேத்** | = | திருப்பித் திருப்பிச் சொல்லவேண்டும். |
| **यत्** <br> **யத்** | = | ஏனெனில், |
| **अभ्यासेन** <br> **அப்⁴யாஸேன** | = | அப்யாஸம் செய்வதால், |
| **भवेद्रमरकीटवत्** <br> **ப⁴வேத்³ரமரகீடவத்** | = | குளவியால் கொட்டப்பட்ட புழுவுக்குப்போல், |
| **तद्भाव:** <br> **தத்³பா⁴வ:** | = | அந்த ப்ரஹ்மபாவம், |
| **भवेत्** <br> **ப⁴வேத்** | = | ஏற்படும், |
| **अत्र** <br> **அத்ர** | = | இவ்விஷயத்தில், |
| **सन्देहं** <br> **ஸந்தே³ஹம்** | = | ஸம்சயத்தை, |
| **अपहाय** <br> **அபஹாய** | = | விட்டு, |
| **कृतनिश्चय:** <br> **க்ருதநிஶ்சய:** | = | உறுதி செய்துகொண்டு, |
| **अभ्यसेत्** <br> **அப்⁴யஸேத்** | = | அப்யாஸம் செய்யவேண்டும். |

ஆரம்ப தசையில் அர்த்தானுஸந்தானத்துடன்

**ब्रह्मैवाहं न संसारी मुक्तोहं**

**ப்³ரஹ்மைவாஹம் ந ஸம்ஸாரீ முக்தோஹம்**

என்ற வாக்யத்தை எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருக்கவேண்டும். இந்த பிரகரணம் முழுவதையுமே அடிக்கடி சொல்லலாம். பிறகு தன் ஸ்வரூபத்தை சரீரம் முதலியவைகளைக் காட்டிலும் வேறுகவும் லௌகிக தர்மங்கள் ஒன்றும் தன்னிடம்

இல்லாததாகவும் தான் ஒன்றிலும் ஸம்பந்தப்படாததாகவும் எப்பொழுதும் நிஜேனத்துக் கொண்டிருக்கவேண்டும். இவ்விதம் அப்யாஸம் செய்துகொண்டு வந்தால் நிச்சயம் அதே நிஜேலயை அடையலாம். இதில் சிறிதும் ஐயம் வேண்டாம். அடிக்கடி தன்ஜேனக் கொட்ட வரும் குளவியை எப்பொழுதும் நிஜேனத்துக்கொண்டிருப்பதால் ஒரு புழு குளவியாகவே ஆய்விடுவதில்லையா? **(18-19)**

(**அவதாரிகை**) இவ்வித அப்யாஸத்தால் ஏற்படும் வேறு சில பலன்களைக் கூறுகிறுர்: -

**ध्यानयोगेन मासैकाद्ब्रह्महत्यां व्यपोहति ।**
**संवत्सरं सदाऽभ्यासात्सिद्ध्यष्टकमवाप्नुयात् ।**
**यावज्जीवं सदाऽभ्यासाज्जीवन्मुक्तो भवेद्यतिः ॥ २० ॥**

**த்⁴யானயோகே³ன மாஸைகாத்³ப்³ரஹ்மஹத்யாம் வ்யபோஹதி ।**
**ஸம்வத்ஸரம் ஸதா³(அ)ப்⁴யாஸாத்ஸித்³த்⁴யஷ்டகமவாப்னுயாத் ।**
**யாவஜ்ஜீவம் ஸதா³(அ)ப்⁴யாஸாஜ்ஜீவன்முக்தோ ப⁴வேத்³யதிஃ ॥ 20 ॥**

| | | |
|---|---|---|
| **मासैकात्**<br>**மாஸைகாத்** | = | ஒருமாத காலம், |
| **ध्यानयोगेन**<br>**த்⁴யானயோகே³ன** | = | இம்மாதிரி த்யாநம் செய்வதால், |
| **ब्रह्महत्यां**<br>**ப்³ரஹ்மஹத்யாம்** | = | ப்ரஹ்மஹத்தி என்ற பாபத்தை, |
| **व्यपोहति**<br>**வ்யபோஹதி** | = | போக்கடிக்கிறுன், |
| **संवत्सरं**<br>**ஸம்வத்ஸரம்** | = | ஒரு வருஷகாலம், |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **अभ्यासात्**<br>**அப்⁴யாஸாத்** | = | அப்யாஸம் செய்வதால், |
| **सिद्ध्यष्टकं**<br>**ஸித்³த்⁴யஷ்டகம்** | = | எட்டு ஸித்திகஜேயும், |
| **अवाप्नुयात्**<br>**அவாப்னுயாத்** | = | அடைவான், |
| **यावज्जीवं**<br>**யாவஜ்ஜீவம்** | = | உயிருள்ளவரை, |

**सदा** = எப்பொழுதும்,

**ஸதா³**

**अभ्यासात्** = அப்யாஸம் செய்வதால்,

**அப்⁴யாஸாத்**

**यतिः** = யதியானவன்,

**யதிः**

**जीवन्मुक्तः** = ஜீவன்முக்தனுக,

**ஜீவன்முக்தः**

**भवेत्** = ஆவான்,

**ப⁴வேத்**

சரீராதிகளைக் காட்டிலும் வேறுபட்டதாகவும், ப்ரஹ்ம ஸ்வரூபமாகவும், தியானம் செய்து வந்தால் ஒரு மாதத்தில் அவனிடமுள்ள ப்ரஹ்மஹத்தியோ, அதற்குச் சமமான மற்ற பாபங்களோ விலகிவிடும். பரிசுத்தனுகி விடுவான். மேலும் அப்யாஸம் செய்துவந்தால் அணிமா, மஹிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்னும் எட்டு ஸித்திகளும் இவனுக்கு ஏற்பட்டுவிடும். அவை களில் ஆசை கொள்ளாமல் மேலும் அப்யாஸம் செய்து வந்தால் ஞானத்திற்கு இடைஞ்சலாக உள்ள பாபங்களும், காமம் முதலான மனத்தின் தோஷங்களும் முதலான விலகி குருவின் உபதேசம் மனத்தில் பதிந்து அநுபவத்திற்கு வரும். நான் ப்ரஹ்மம் என்பதை நேரில் காண்பான். முக்தனுகவே ஆகிவிடுவான். **(20)**

(**அவதாரிகை**) 15 வது சுலோகத்தில் **पञ्चकोशातिगः** (**பஞ்சகோஶாதிக³ः**) ஐந்து கோசங்களுக்கும் அப்பால்பட்டவன் என்று கூறியுள்ளதை விளக்கும் முறையில் சரீரத்தில் அடங்கியுள்ள பொருள் ஒவ்வொன்றும் ஆத்மாவல்ல என்பதை உபதேசிக்கிறுர்: -

**नाहं देहो न च प्राणो नेन्द्रियाणि तथैव च ।**
**न मनोऽहं न बुद्धि नैव चित्तमहंकृतिः ॥ २१ ॥**

**நாஹம் தே³ஹோ ந ச ப்ராணோ நேந்த்³ரியாணி ததை²வ ச ।**
**ந மனோ(அ)ஹம் ந பு³த்³தி⁴ நைவ சித்தமஹங்க்ருதிः ॥ 21 ॥**

**नांहं पृथ्वी न सलिलं न च वह्निस्तथाऽनिलः ।**
**न चाकाशो न शब्दश्च न च स्पर्शस्तथा रसः ॥ २२ ॥**

**நாம்ஹம் ப்ருத்²வீ ந ஸலிலம் ந ச வஹ்நிஸ்ததா²(அ)னிலः ।**
**ந சாகாஶோ ந ஶப்³த³ஶ்வ ந ச ஸ்பர்ஶஸ்ததா² ரஸः ॥ 22 ॥**

**नाहं गन्धो न रूपं च न मायाऽहं न संसृतिः ।**
**सदा साक्षिस्वरूपत्वाच्छिव एवास्मि केवलः ॥ २३ ॥**

**நாஹம் க3ந்தோ4 ந ரூபம் ச ந மாயா(அ)ஹம் ந ஸம்ஸ்ருதி: ।**
**ஸதா3 ஸாக்ஷிஸ்வரூபத்வாச்சி2வ ஏவாஸ்மி கேவல: ॥ 23 ॥**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **न देह:**<br>**ந தே3ஹ:** | = | (ஸ்தூல) சரீரமல்ல, |
| **न च प्राण:**<br>**ந ச ப்ராண:** | = | ப்ராணவாயுவும் அல்ல, |
| **तथैव**<br>**ததை2வ** | = | அப்படியே, |
| **नेन्द्रियाणि च**<br>**நேந்த்3ரியாணி ச** | = | இந்திரியங்களும் அல்ல, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **न मन:**<br>**ந மன:** | = | மனம் அல்ல, |
| **न बुद्धि**<br>**ந பு3த்3தி4** | = | புத்தியும் அல்ல, |
| **नैव चित्तं अहंकृति:**<br>**நைவ சித்தம் அஹங்க்ருதி:** | = | சித்தமும் அல்ல, அஹங்காரமும் அல்ல, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **न पृथ्वी**<br>**ந ப்ருத்2வீ** | = | பிருதிவி என்னும் பூதம் அல்ல, |
| **न सलिलं**<br>**ந ஸலிலம்** | = | ஜலம் அல்ல, |
| **न च वह्नि:**<br>**ந ச வஹ்னி:** | = | தேஜஸ்ஸும் அல்ல, |
| **तथा**<br>**ததா2** | = | அவ்விதமே, |
| **(न) अनिल:**<br>**(ந) அனில:** | = | வாயு அல்ல, |
| **न च आकाश:**<br>**ந ச ஆகாஶ:** | = | ஆகாசமும் அல்ல, |

**न शब्दश्च** = சப்தமும் அல்ல,

**ந ஶப்³த³ஶ்வ**

**न च स्पर्श** = ஸ்பர்சமும் அல்ல,

**ந ச ஸ்பர்ஶ**

**तथा** = அவ்வாறே,

**தthா²**

**र सः (न)** = ரஸமும் அல்ல,

**ர ஸ: (ந)**

**अहं** = நான்,

**அஹம்**

**न गन्धः** = வாஸனை அல்ல,

**ந க³ந்த⁴:**

**न रूपं च** = ரூபமும் அல்ல,

**ந ரூபம் ச**

**अहं** = நான்,

**அஹம்**

**न माया** = மாயை அல்ல,

**ந மாயா**

**न संसृतिः** = ஸம்ஸாரம் அல்ல,

**ந ஸம்ஸ்ருதி:**

**सदा** = எப்பொழுதும்,

**ஸதா³**

**साक्षिस्वरूपत्वात्** = ஸாக்ஷி ஸ்வரூபமாயிருப்பதால்,

**ஸாக்ஷிஸ்வரூபத்வாத்**

**केवलः** = தனிப்பட்ட,

**கேவல:**

**शिव एव** = சிவஸ்வரூபமாகவே,

**ஶிவ ஏவ**

**अस्मि** = இருக்கிறேன்.

**அஸ்மி**

இந்த மூன்று சுலோகங்களில், அக்ஞானத்தால் 'நான்' என்று எண்ணிக் கொண்டிருக்கும் பொருள்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகக் காட்டி ஆத்மா அல்ல என்று விலக்கி கடைசியில் மிஞ்சுகின்ற பரப்ரஹ்மமே ஆத்மா என்று உபதேசிக்கிறார். ஸாதாரணமாக எல்லோரும் சரீரத்தையே நான் என்று வியவஹாரம் செய்கிறோம். இந்த சரீரத்தை அன்னமயம், பிராணமயம், மனோமயம் விஞ்ஞான மயம், ஆனந்தமயம் என்று ஐந்து கோசங்களாக பிரித்திருக்கிறார்கள். இதையே ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் என்று மூன்று விதமாகவும் பிரித்துக்

கூறுவதுண்டு. அன்னத்திலிருந்து உண்டாகி அன்னத்தாலேயே வளர்ந்து முடிவில் முடிவில் அழிந்துபோகும் ரக்தம், மாம்ஸம், அஸ்தி, தோல் முதலியவைகள் அடங்கிய ஸ்தூல சரீரம் தான் அன்னமயகோசம் எனப்படும். அன்னமயகோசம்தான் ஸ்தூல சரீரம் ஆகும். வாக், கை, கால், பாயு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்களும், பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற ஐந்து பிராணன்களும் சேர்ந்து பிராணமய கோசம் எனப்படும். கண், காது, மூக்கு, நாக்கு த்வக் என்ற ஐந்து ஞானேந்திரி யங்களும் மனமும் சேர்ந்து மனோமயகோசம் எனப்படும். ஞானேந்திரியங்களுடன் கூடிய புத்தி விக்ஞானமய கோசமாகும். இந்த மூன்று கோசங்களும் சேர்ந்து ஸூக்ஷ்ம சரீரம் என்று பெயர். இந்த இரண்டு சரீரங்களிலும் பஞ்ச பூதங்களின் ஸூக்ஷ்மாம்சமும் ஸ்தூலாம்சமும் சேர்ந்திருக்கி றது. அவித்யை காரண சரீரம். அதுவே ஆனந்தமயகோசம். ஒரே அந்தக்கரணம், விஷயத்தைப் பற்றின எண்ணம் முதலில் ஸாமான்யமாக ஏற்படும்பொழுது மனம் என்றும், தீர்மானிக்கும்பொழுது புத்தி என்றும் அபிமானம் கொள்ளும். பொழுது அஹங்காரம் என்றும், தன்னுடையதாக நினைக்கும் ஐந்து பொழுது சித்தம் என்றும் பெயர் அடைகிறது. ஐந்து கோசங்களிலும் மூன்று சரீரங்களிலும் உள்ள ஒவ்வொ ன்றையும், நான் தனியாக இருந்துகொண்டு அறிந்துகொள்கிறேன். என்றால் அவை அறியப்படுகின்றன. இவைகளையும் இவை செய்யும் காரியங்களையும் ஸாக்ஷியாக இருந்து பார்க்கிறேன். அறிபவனைக்காட்டிலும் அறியப்படும் பொருள் வேறுகத் தான் இருக்கமுடியும். ஆகவே இவைகளில் ஒன்றும் நான் உலகில் அல்ல. நான் இவைகளைக்காட்டிலும் வேறு. உலகில் உள்ள பொருள்கள் எல்லாவற்றையும் 'நான் அல்ல' என்று விலக்கிவிட்டால் கடைசியில் மிஞ்சுவது

**शान्तं शिवमद्वैतं**

**(ஶாந்தம் ஶிவமத்³வைதம்)**

என்று மாண்டுக்ய உபநிஷத்தில் காட்டிய பரிசுத்தமான சைதன்யமே. அதுவே நான்.

**'तदेकोऽवशिष्टः शिवः केवलोहं '**

**'ததே³கோ(அ)வஶிஷ்ட꞉ ஶிவ꞉ கேவலோஹம் '**

என்று தச்லோகியில் கூறியமுறை இங்கும் காணப்படுகிறது. (21-23).

**(அவதாரிகை)** தன்னையே ஜகத்காரண வஸ்துவாக அனுஸந்தானம் செய்கிறார்: -

**मय्येव सकलं जातं मयि सर्वं प्रतिष्ठितम् ।**
**मयि सर्व लयं याति तद्ब्रह्मास्म्यहमद्वयम् ॥ २४ ॥**

**மய்யேவ ஸகலம் ஜாதம் மயி ஸர்வம் ப்ரதிஷ்டி²தம் ।**
**மயி ஸர்வ லயம் யாதி தத்³ப்³ரஹ்மாஸ்ம்யஹமத்³வயம் ॥ 24 ॥**

| | | |
|---|---|---|
| **सकलं**<br>**ஸகலம்** | = | எல்லாம், |
| **मय्येव**<br>**மய்யேவ** | = | என்னிடத்திலேயே, |
| **जातं**<br>**ஜாதம்** | = | உண்டானது, |
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லாம், |
| **मयि**<br>**மயி** | = | என்னிடம், |
| **प्रतिष्ठितम्**<br>**ப்ரதிஷ்டி²தம்** | = | நிலைத்து நிற்கிறது, |
| **मयि**<br>**மயி** | = | என்னிடம், |
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லாம், |
| **लयं याति**<br>**லயம் யாதி** | = | மறைந்துபோகிறது, |
| **तत्**<br>**தத்** | = | ஆகையால், |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **अद्वयं**<br>**அத்³வயம்** | = | அத்விதீயமான, |
| **ब्रह्मासिम**<br>**ப்³ரஹ்மாஸிம** | = | ப்ரஹ்மமாக இருக்கிறேன். |

முன்னால் ப்ரஹ்மத்திலிருந்து ஆகாசம் முதலான பிரபஞ்சம். முழுவதும் உண்டாவதையும் ப்ரஹ்மத்திலேயே மறைந்துபோவதையும் குறிப்பிட்டார். அந்த ப்ரஹ்மமே நான் என்றும், வேறான சரீராதிகள் நான் அல்ல என்றும் எப்பொழுதும் அநுஸந்தானம் செய்து ப்ரஹ்மாநுபவத்தை யடைந்த ஞானி தன்னையே காரண ப்ரஹ்மமாக நினைப்பதால் தன்னிடமிருந்தே பிரபஞ்சம் உண்டாவதாகவும் தன்னிடமே நிலைத்து, முடிவில் தன்னிடமே ஒடுங்குவதாகவும் காண்கிறான்.

ஆகையினால் எல்லாவற்றிற்கும் ஆத்மாவே காரணம். காரணத்தைக் காட்டிலும் கார்யம் வேறு அல்ல என்பதை உலகில் பார்த்திருக்கிறோம். மண்ணிலே தோன்றி மண்ணிலே இருந்து மண்ணிலே மறையும் குடம் மண்ணைக் காட்டிலும் வேறு இல்லை அல்லவா. பெயரும் உருவமும் தான் புதிதாக ஏற்பட்டதே தவிர அதே

மண்தான் குடமாக காக்ஷியளிக்கிறது. அதுபோல ஆத்மாவில் தோன்றி, அதிலேயே இருந்து ஆத்மாவிலேயே மறையும் பிரபஞ்சமும் ஆத்மாவைத்தவிற வேறு அல்ல. ஆத்மாதான் ப்ரஹ்மம். வியவஹாரதசையில் எத்தனையோ வேற்றுமைகள் இருந்த போதிலும் அத்வைத ப்ரஹ்மம்தான் உண்மையானது. **(24)**

**(அவதாரிகை)** கடைசியாக ப்ரஹ்மஸ்வரூபாநுசிந்தன முறையை சுருக்கிக் காட்டுகிறார்: -

**सर्वज्ञोऽहमनन्तोऽहं सर्वेशः सर्वशक्तिमान् ।**
**आनन्दः सत्यबोधोऽहमिति ब्रह्मानुचिन्तनम् ॥ २५ ॥**

**ஸர்வஜ்ஞோ(அ)ஹமனந்தோ(அ)ஹம் ஸர்வேஶ: ஸர்வஶக்திமான் ।**
**ஆனந்த³: ஸத்யபோ³தோ⁴(அ)ஹமிதி ப்³ரஹ்மானுசிந்தனம் ॥ 25 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **सर्वज्ञः** | = | எல்லாம் அறிந்தவன், |
| **ஸர்வஜ்ஞ:** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **अनन्तः** | = | பரிச்சேதம் (எல்லை) அற்றவன், |
| **அனந்த:** | | |
| **सर्वेशः** | = | எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவன், |
| **ஸர்வேஶ:** | | |
| **सर्वशक्तिमान्** | = | எல்லாச் சக்திகளுடன் கூடியவன், |
| **ஸர்வஶக்திமான்** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **आनन्दः** | = | ஆனந்தரூபி, |
| **ஆனந்த³:** | | |
| **सत्यबोधः** | = | ஸத்தாகவும் சித்தாகவும் இருப்பவன், |
| **ஸத்யபோ³த⁴:** | | |
| **इति** | = | என்பது, |
| **இதி** | | |
| **ब्रह्मानुचिन्तनम्** | = | ப்ரஹ்மஸ்வரூபத்தை அநுஸந்தானம் |
| **ப்³ரஹ்மானுசிந்தனம்** | | செய்யும் முறை. |

ஸகுணமான ஈசுவரனும் ஈசுவரனும் நிர்குணமான ப்ரஹ்மமும் நான்தான் என்று கூறுகிறார். எங்கும் இருந்து எல்லாம் அறிந்து, எல்லாச் சக்திகளுடன் எல்லா

வற்றையும் அடக்கி ஆள்பவர் ஈசுவரன். மாயையுடன் சேர்ந்த நிலையில்தான் இவை ஏற்படும். இவர் ஸகுண மூர்த்தி. இவரும் என்னைத் தவிற வேறில்லை. மாயை விலகிவிட்டால் மிஞ்சுவது ஸச்சிதானந்த ப்ரஹ்மம். அதுவும் நான்தான். இவ்வாறு ப்ரஹ்மானுசிந்தனம் செய்யவேண்டும். **(25)**

(**அவதாரிகை**) எது உண்மை, எது பொய் என்பதைச் சுட்டிக் காட்டுகிறுர்: -

## अयं प्रपञ्च मिथ्यैव सत्यं ब्रह्माहमव्ययम् ।
## अत्र प्रमाणं वेदान्ता गुरवोऽनुभवस्तथा ॥ २६ ॥

**அயம் ப்ரபஞ்ச மித்$^{2}$யைவ ஸத்யம் ப்$^{3}$ரஹ்மாஹமவ்யயம் ।**
**அத்ர ப்ரமாணம் வேதா$^{3}$ந்தா கு$^{3}$ரவோ(அ)னுப$^{4}$வஸ்ததா$^{2}$ ॥ 26 ॥**

**अयं** = இந்த,
**அயம்**
**प्रपञ्चं** = பிரபஞ்சம்,
**ப்ரபஞ்சம்**
**मिथ्यैव** = பொய்யே,
**மித்$^{2}$யைவ**
**अहं** = நான்,
**அஹம்**
**सत्यं** = உண்மையானதும்,
**ஸத்யம்**
**अव्ययं** = அழிவற்றதுமான,
**அவ்யயம்**
**ब्रह्म** = ப்ரஹ்மம்,
**ப்$^{3}$ரஹ்ம**
**अत्र** = இந்த விஷயத்தில்,
**அத்ர**
**वेदान्ताः** = உபநிஷத்துக்களும்,
**வேதா$^{3}$ந்தா**
**गुरवः** = ஆசார்யர்களும்,
**கு$^{3}$ரவః**
**तथा** = அவ்வாறே,
**ததா$^{2}$**
**अनुभवः** = அநுபவமும்,
**அனுப$^{4}$வః**

**प्रमाणं** = பிரமாணம்.

**ப்ரமாணம்**

நாம் காணும் பிரபஞ்சம் முழுவதும் பொய். வாஸ்தவம் அல்ல. பொய் என்பதற்கு அடியோடு பிரபஞ்சம் இல்லை என்றோ, அதனால் ஒரு காரியமும் நடைபெறாது என்றோ பொருள் அல்ல. பிரபஞ்சத்தின் ஸ்வரூபத்தை நன்கு விசாரித்துப் பார்த்தோமானால், ஒருவிதத்திலும், அதாவது இருக்கிறது என்றோ, இல்லை என்றோ விளக்கிக் கூறமுடியாத நிலையில் இருப்பதால் உண்மையாக இல்லை, பொய் என்று தீர்மானிக்கிறோம். பிரபஞ்சம் பொய்யாக இருந்தாலும் அதனால் எல்லா வியவஹாரமும் நடைபெறலாம். உலக வியவஹாரம் நடைபெற பொருள் இருந்தால் போதும். அது உண்மையாக இருக்கவேண்டியதில்லை. கயிற்றில் தோன்றிய பொய்ப் பாம்பு பயத்தை உண்டுபண்ணுவதில்லையா. இது கயிறு என்று தெரிந்ததும் பாம்பு மறைந்து போவதுபோல் ப்ரஹ்மத்தை அறிந்ததும் பிரபஞ்சமும் மறைந்துபோய்விடும். அந்த ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள். அதுவே ஆத்மா.

இந்த விஷயத்தை

**'नेह नानास्ति किंचन' 'एकमेवाद्वितीयं' 'तत्सत्यं'**

**('நேஹ நானாஸ்தி கிஞ்சன' 'ஏகமேவாத்³விதீயம்' 'தத்ஸத்யம்')**

முதலான உபநிஷத்துக்கள் நமக்குக் காட்டுகின்றன. இவைகளே பிரமாணம். உபநிஷத்துக்களின் மூலம் ஆத்மானுபவம் பெற்ற ஆசார்யர்களும் பிரமாணம். கடைசியாக அந்த ஆசார்யரின் உபதேசத்தால் அவரவர்களுக்கு ஏற்படும் ஸ்வானு பவமும் இதில் பிரமாணமாகும். ஆசார்யரிடமிருந்து உபநிஷத் மஹாவாக்யார்த்த உபதேசம் பெற்றால்தான் ஸ்வானுபவம் ஏற்படும் என்பதை இங்கு காட்டுகிறார். **(26)**

**(அவதாரிகை)** ப்ரஹ்மவித்தான பரமாசார்யாள் முன் சொல்லப்பட்ட பிரமாணங்களில் மூன்றாவதான ஸ்வாநுபவத்தை விவரித்துக் காட்டுகிறார்: -

**ब्रह्मैवाहं न संसारी न चाहं ब्रह्मणः पृथक् ।**
**नाहं देहो न मे देहः केवलोऽहं सनातनः ॥ २७ ॥**

**ப்³ரஹ்மைவாஹம் ந ஸம்ஸாரீ ந சாஹம் ப்³ரஹ்மண: ப்ருத²க் ।**
**நாஹம் தே³ஹோ ந மே தே³ஹ: கேவலோ(அ)ஹம் ஸனாதன: ॥ 27 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**ब्रह्मैव** = ப்ரஹ்மமே,

**ப்³ரஹ்மைவ**

| | | |
|---|---|---|
| **न संसारी**<br>**ந ஸம்ஸாரீ** | = | ஸம்ஸாரி அல்ல, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **ब्रह्मण:**<br>**ப்³ரஹ்மண:** | = | ப்ரஹ்மத்தைக் காட்டிலும், |
| **न पृथक्**<br>**ந ப்ருத²க்** | = | வேறு அல்ல, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **न देह:**<br>**ந தே³ஹ:** | = | சரீரம் அல்ல, |
| **देह:**<br>**தே³ஹ:** | = | சரீரம், |
| **न मे**<br>**ந மே** | = | என்னுடையது அல்ல, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **सनातन:**<br>**ஸனாதன:** | = | எப்பொழுதும் இருப்பவன், |
| **केवल:**<br>**கேவல:** | = | தனிப்பட்டவன். |

ஆத்மாவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் கொஞ்சமும் வேற்றுமை கிடையாது. ஆத்மாவே ப்ரஹ்மம். ப்ரஹ்மமே ஆத்மா. அக்ஞானத்தால் இரண்டாகத் தோன்று கிறதே தவிற உண்மையில் தத்வம் ஒன்றுதான். உலக தர்மங்கள் ஒன்றும் ஆத்மாவுக்குக் கிடையாது. அக்ஞான நிலையில் பாமரன் தேஹமே நான் என்று நினைக்கிறன். கொஞ்சம் படித்து விவேகம் பெற்றவன் தேஹத்தைக் காட்டிலும் வேறுகத் தன்னைத் தெரிந்துகொண்டாலும் இது என் தேஹம் என்று அபிமானம் கொள்கிறன். ஞானி தேஹத்தை நான் என்றே, தன்னுடையது என்றே எண்ண மாட்டான். எப்பொழுதும் மாறுபாடில்லாமல் ஒரேமாதிரியாக இருப்பதும் பிரபஞ்சத்துடன் ஒட்டாமல் தனித்து நிற்பதுமான ப்ரஹ்மத்தையே நான் என்று நினைப்பான். **(27)**

**(அவதாரிகை)** மூன்றுவது பிரமாணமான அனுபவத்தைக் கூறி விட்டு முதலா வதான வேதாந்த பிரமாணத்தைக் காட்டுகிறர்: -

## एकमेवाद्वितीयं वै ब्रह्मणो नेह किंचन ॥ २८ ॥

**ஏகமேவாத்³விதீயம் வை ப்³ரஹ்மணோ நேஹ கிஞ்சன ॥ 28 ॥**

(ப்ரஹ்மம்)

| | | |
|---|---|---|
| **एकमेव** **ஏகமேவ** | = | ஒரே பொருள், |
| **अद्वितीयं** **அத்³விதீயம்** | = | இரண்டு அற்றது, |
| **इह** **இஹ** | = | இங்கு, |
| **ब्रह्मण:** **ப்³ரஹ்மண:** | = | ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறாக, |
| **किंचन** **கிஞ்சன** | = | ஒன்றும், |
| **न** **ந** | = | இல்லை. |

### एकमेवाद्वितीयं, नेह नानास्ति किंचन

**(ஏகமேவாத்³விதீயம், நேஹ நானாஸ்தி கிஞ்சன)**

என்பது உபநிஷத் வாக்யங்கள். தத்வம் ஒன்றுதான், இரண்டற்றது, ப்ரஹ்மத்தை காட்டிலும் வேறாக ஒன்றும் இல்லை என்பது இதன் பொருள். உலகில் பொதுவாக ஒவ்வொரு பொருளிலும் மூன்றுவித வேற்றுமைகளைக் காணலாம். மனிதனை எடுத்துக்கொள்வோம். ஒரு மனிதன் மற்றொரு மனிதனைக்காட்டிலும் வேறானவன். இது ஸஜாதீயபேதம். மனிதன் மரத்தைக்காட்டிலும் வேறானவன் என்பது விஜாதீய பேதம். மனிதன் ஒருவனானாலும் அவனிடம் கை, கால் முதலான பல வேற்றுமை கள் காணப்படுகின்றன. இது ஸ்வகதபேதம். இம் மூன்று பேதங்களும் எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றன. ப்ரஹ்மத்தில் இம் மூன்று பேதங்களும் இல்லை என்பதைக் காட்டவே

| | | |
|---|---|---|
| **एकं** | **एव** | **अद्वितीयम्** |
| **(ஏகம்),** | **(ஏவ),** | **(அத்³விதீயம்)** |

என்று மூன்று பதங்கள் உபநிஷத்தில் காணப்படுகின்றன. ப்ரஹ்மம் ஒன்று என்பதால் அதுபோன்ற வேறு பொருள் இல்லை, அதாவது ஸஜாதீய பேதம் இல்லை என்று கிடைக்கிறது. 'இரண்டற்றது' என்பதால் விஜாதீய பேதம் இல்லை. என்று கிடைக்கிறது. ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறான இரண்டாவது பொருளே கிடையாது. 'ஒன்றுதான்' என்பதால் ஸ்வகதபேதம் இல்லை. அதாவது உடலில் பல வேற்றுமை கள் இருப்பதுபோல் ப்ரஹ்மஸ்வரூபத்தில் சிறிதும் வேற்றுமை இல்லை. அது

அகண்டம் என்று கிடைக்கிறது. மூன்றுவித வேற்றுமைகளும் அற்ற ப்ரஹ்ம தத்வம் ஒன்றே உண்மைப்பொருள். அதுவே ஆத்மா என்பதுதான் உபநிஷத் ஸித்தாத்தம்.

**(28)**

**(அவதாரிகை)** கடைசியாக ஆத்மானுபவம் ஏற்பட உபதேசம் செய்த ஸத்குருவையும் அநுக்ரஹம் செய்த ஈசுவர ஸ்வரூபத்தையும் அநுஸந்தானம் செய்வதுடன் தியான மார்க்கத்தைக்காட்டி நூலை உபஸம்ஹாரம் செய்கிறர்: -

**हृदयकमलमध्ये दीपवद्वेदसारं**
**प्रणवमयमतर्क्यं योगिभिर्ध्यानगम्यम् ।**
**हरिगुरुशिवयोगं सर्वभूतस्थमेकं -**
**सकृदपि मनसा वै चिन्तयेद्यः स मुक्तः ॥ २९ ॥**

**ஹ்ருத³யகமலமத்⁴யே தீ³பவத்³வேத³ஸாரம்**
**ப்ரணவமயமதர்க்யம் யோகி³பி⁴ர்த்⁴யானக³ம்யம் ।**
**ஹரிகு³ருஶிவயோக³ம் ஸர்வபூ⁴தஸ்த²மேகம் -**
**ஸக்ருத³பி மனஸா வை சிந்தயேத்³ய꞉ ஸ முக்த꞉ ॥ 29 ॥**

| | | |
|---|---|---|
| **यः**<br>**ய꞉** | = | எவன், |
| **हृदयकमलमध्ये**<br>**ஹ்ருத³யகமலமத்⁴யே** | = | தாமரைபோன்ற ஹிருதயத்தில், |
| **दीपवत्**<br>**தீ³பவத்** | = | தீபம்போல் ஒளியுள்ளதும், |
| **वेदसारं**<br>**வேத³ஸாரம்** | = | உபநிஷத்தின் ஸாரமானதும், |
| **प्रणवमयं**<br>**ப்ரணவமயம்** | = | ஓங்கார ஸ்வரூபமானதும், |
| **अतर्क्यं**<br>**அதர்க்யம்** | = | புத்தியால் ஊஹிக்கமுடியாததும், |
| **योगिभिः**<br>**யோகி³பி⁴꞉** | = | மனத்தை அடக்கிய யோகிகளால், |
| **ध्यानगम्यं**<br>**ர்த்⁴யானக³ம்யம்** | = | தியானத்தால் அறியக்கூடியதும், |
| **सर्वभूतस्थं**<br>**ஸர்வபூ⁴தஸ்த²ம்** | = | எல்லாபிராணிகளிடமும் இருப்பதும், |
| **एकं**<br>**ஏகம்** | = | ஒன்றுனதும், |

| | | |
|---|---|---|
| हरिगुरुशिवयोगं<br>ஹரிகு³ருஶிவயோக³ம் | = | விஷ்ணு, ஆசார்யன், சிவன் இம்மூன்றும் சேர்ந்ததுமான ப்ரஹ்மதத்வத்தை, |
| सकृदपि<br>ஸக்ருத³பி | = | ஒரு தடவையாவது, |
| मनसा<br>மனஸா | = | மனத்தால், |
| चिन्तयेत्<br>சிந்தயேத் | = | தியானம் செய்கிறனே, |
| सः<br>ஸ: | = | அவன், |
| मुक्तः<br>முக்த: | = | முக்தன். |

இந்நூலின் ஆரம்பத்தில் 'நானே பரப்ரஹ்மம்' என்ற உறுதியான ஞானம் பெற்றவன் தான் 'முக்தன்' என்று முக்தனுடைய லக்ஷணத்தைக் கூறி ஞானம் உறுதிப்பட ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அநுஸந்தானம் செய்யவேண்டிய முறைகளையும் விரிவாகக்காட்டி முடிவில் ஞானத்திற்கு ஸாதனமாக தியான யோகத்தை உபதேசிக் கிறர். எல்லா பிராணிகளிடமும் ஒரே ப்ரஹ்மதத்வம் விளங்குகிறது. அதை நம் புத்தியால் ஊஹித்துத் தெரிந்துகொள்ள முடியாது. மனத்தை அடக்கி இடைவிடாது தியானம் செய்தால்தான் அதை அறிந்து கொள்ளலாம். உபநிஷத்தின் தாத்பர்யம் இதில்தான். இதை தாமரை உருக்கொண்ட தன் ஹிருதயத்தில் ஜ்யோதி ஸ்வரூப மாக மனதால் இடைவிடாது சிந்திக்க வேண்டும். தன் ஆத்ம ஸ்வரூபமாக தியானம் செய்ய வேண்டும். தியானம் செய்பவனுக்கு சிவன் வேறு, விஷ்ணு வேறு என்ற வேற்றுமையோ, குரு வேறு, ஈசுவரன் வேறு என்ற வேற்றுமையோ சிறிதும் தோன் றக்கூடாது. சிவனுகவும் விஷ்ணுவாகவும் தோன்றும் தத்வம் ஒன்றே. அதே தத்வம் தான் குருமூர்த்தியாகவும் விளங்குகிறது என்று தியானிக்கவேண்டும். இவ்வாறு சிவன், விஷ்ணு முதலான எல்லா தேவதாமூர்த்திகளும் ஆசார்ய மூர்த்தியும் ஒன்று சேர்ந்த ஸகுண ப்ரஹ்ம ஸ்வரூபத்தை இடைவிடாது தியானம் செய்து வந்தால் ஈசுவரானுக்ரஹத்தால் ஸுலபமாக ஞானம் பெற்று முக்தனுவான்.

இங்கு எல்லோருக்கும் உபயோகப்படும்படியான முக்யமான உபதேசத்தை ஆசார்யாள் காட்டியிருக்கிறர். சிவன், விஷ்ணு முதலியவை ஒரே பரப்ரஹ்மத்தின் லீலாமூர்த்திகள். அவர்களுக்குள் ஏற்றத்தாழ்வோ, வேற்றுமையோ சிறிதும் பாராட்ட க்கூடாது. அத்துடன் ஈசுவரனைக் காட்டிக் கொடுத்த ஆசார்யரை ஸாமான்ய மனிதனுக எண்ணுமல் அவரையும் ஈசுவரனுகவே நினைக்கவேண்டும். இது முக்ய மாக கவனிக்கத் தகுந்தது. **(29)**

## ப்ரஹ்மாநுசிந்தனம் முற்றிற்று.